# பகவத் பாதை

BAGAVATH PATHAI

தமிழ் மாத இதழ்

மலர் 8 | இதழ் 6 | டிசம்பர் 10, 2021 | வருடச்சந்தா ரூ 100/- Volume : 8 | Issue 6 | December 10th, 2021 | Annual Subscription Rs. 100/-



## மேம்பட்ட ஞானப் புரிதல்

# வாழும் ஞானி ஸ்ரீ பகவத் ஐயா அவர்களுடன்
# 3 நாள் ஞான முகாம்.

ஸ்ரீ பகவத் ஐயா அவர்களின் நேரடி ஞான முகாம், **சேலம் ஸ்ரீ பகவத் பவனில்** நடைபெற உள்ளது.



நாள் : **24-12-21** காலை **9.00** மணி முதல் **26-12-21** மதியம் **3.00** மணி வரை

இடம் : **சேலம், ஸ்ரீபகவத் பவன்,** ஜருகு மலை அடிவாரம், கொடம்பைக்காடு, பெரிய கவுண்டாபுரம், காரிப்பட்டி (Po), சேலம்.

ஞான முகாமில் கலந்து கொள்பவர்கள் முதல் நாள் 23-12-21 வியாழக்கிழமை மாலைக்குள் வந்து சேர வேண்டுகிறோம்.

ஞான முகாமில் கலந்து கொள்பவர்கள் குழந்தைகளையும் மற்றவர்களையும் அழைத்து வருவதை கட்டாயம் தவிர்க்க வேண்டுகிறோம்.

ஆண்களுக்கும் பெண்களுக்கும் தனித்தனியாக தங்கும் வசதி உள்ளது.

ஞானமுகாமில் 75 அன்பர்கள் மட்டுமே கலந்துகொள்ள முடியும். எனவே 15-12-21 ஆம் தேதிக்குள் அவசியம் முன் பதிவு செய்ய வேண்டுகிறோம்.

**செலவு பகிர்வு :**
ரூ. **5000/-**
நபருக்கு

**முன் பதிவுக்கு**

கலந்து கொள்பவர்களின் பெயர், முழு முகவரி, செல் நெம்பர் ஆகியவற்றை, ஆதார் Xerox Copy உடன் December Gnanamuhaam என Type செய்து Whatsapp அனுப்ப வேண்டிய எண் : **9942219065**

**வழித் தடம் :** Google Map-ல் Sri Bagavath Bhavan என Search செய்தால் Route Map கிடைத்து விடும். சேலம் ஜங்சன் இரயில் நிலையம் - புதிய பேருந்து நிலையம் - ஆத்தூர் வழி அயோத்தியாபட்டிணம் பஸ் ஸ்டாப் -பெரியகவுண்டாபுரம் செல்ல மினி பஸ் (அ) ஆட்டோ கிடைக்கும்.)

பெரிய கவுண்டாபுரம் - (கொடம்பக்காடு)
ஸ்ரீ பகவத் பவன் ஆஸ்ரம்.



தனி அறை வேண்டுபவர்கள் தனிப்பட்ட முறையில் விண்ணப்பிக்கவும்.

(i) Single Bed Room - 8 மட்டும் உள்ளது.

(ii) Double Bed Room - 8 மட்டும் உள்ளது.

இதற்கு தனிக் கட்டணம் செலுத்த வேண்டுகிறோம். ஒரு அறையில் இணைந்து தங்குபவர்கள் இந்த கட்டணத்தை பகிர்ந்து (Sharing) கொள்ளலாம்.

குறைந்த எண்ணிக்கையில் இருப்பதால் முன் பதிவு அவசியம். தொடர்புக்கு : **7904118421**

அன்புடன்,
**ஸ்ரீ பகவத் மிஷன்,** சேலம்-636003.
**9994205880, 9789165555**

## உள்ளே



கூடுதல் தகவல்களைப் பெற விரும்புகிறீர்களா? (அ) பாதையை நண்பர்களுக்கு அனுப்ப விரும்புகிறீர்களா?




Sri Bagavath Mission

31, Ramalingasamy Street, Ammapet,
Salem - 636 003. Tamilnadu India
www.sribagavathmission.org
www.sribagavath.org
E-mail : sribagavathmission@gmail.com

V.A.P. SHARAVANAN - 99942 05880
K.S. JEEVAMANI - 97891 65555



This book Designed by
SRI ESPARI GRAPHICS, Salem-3.
Cell : 90926 46260, 98651 34075



# மேம்பட்ட ஞானப் புரிதல்

- ஸ்ரீ பகவத்

அந்த மாலை வேளையில் அவர்கள் என்னைச் சந்திக்க வந்திருந்தார்கள். மகன், அப்பா, அம்மா என அவர்கள் மூவரும் ஒரே குடும்பத்தைச் சேர்ந்தவர்கள்.

மூவருமே நன்கு படித்து நல்ல வேலையில் இருக்கிறார்கள்.

அவர்கள் மூவரும் நமது கருத்துகளைப் புரிந்து கொண்டது பற்றிப் பேசிக் கொண்டிருந்தார்கள்.

அவர்களுள், அம்மாவின் கூற்று சிந்திக்கும்படியாக அமைந்திருந்த காரணத்தினால்

அதனை ஒரு கட்டுரையாக்க நேர்ந்துவிட்டது.

அந்த அம்மா ஒரு பெரிய பள்ளியின் முதல்வராகப் பணியாற்றி வருகிறார்.

அவர் தனது நிலையை விளக்கினார்:

"பள்ளியில் வேலை செய்யும் மற்ற ஆசிரியைகளையும் நான்தான் நிர்வாகம் செய்ய வேண்டியதாக உள்ளது. ஒவ்வொருவரும் ஒவ்வொரு தன்மையில் இருக்கின்றனர்...

"அவர்களை நிர்வாகம் செய்வதால் எனக்கு தேவையற்ற டென்சன் ஏற்பட்டு விடுகிறது. பணியிலிருந்து ஓய்வு பெற்று விடலாமா என்று எண்ணுகிறேன்."

– இது அவர் சந்திக்கும் பிரச்சினை.

இது பற்றி நாம் இங்கு ஆய்வு செய்யப் போவதில்லை. ஏனெனில் இதைவிடவும் பல விதமான பிரச்சினைகளைச் சந்தித்தவாறு பலர் உள்ளனர்.

அவர் அது சம்பந்தமாக தனது இன்னுமொரு கருத்தையும் வெளியிட்டார். அதனைத் தான் நாம் இங்கு ஆய்வுக்கு எடுத்துக் கொள்ள இருக்கிறோம்.

அப்படி அவர் என்ன கூறுகிறார்?

"அய்யாவுடைய கருத்துக்களை நான் புரிந்து கொண்டது போலவே தெரிகிறது. ஆனாலும் எனது கணவர் மற்றும் மகன் புரிந்து கொண்டது போல் நான் தெளிவாகப் புரிந்து கொள்ளவில்லையோ எனத் தோன்றுகின்றது."

புரிந்து கொள்வது என்பது என்ன?

எதைப் புரிந்து கொள்ள வேண்டும்?

"எனது கணவருக்கும், மகனுக்குங்கூட பலவிதமான பிரச்சினைகள் உள்ளன. ஆனால் அவர்கள் எவரும் என்னுடைய அளவுக்கு பாதிப்பை அடையவில்லை."

– அவர் இப்படிக் கூறினார்.

பிரச்சினைகளினால் பாதிக்கப்படாமல் இருப்பதுதான்

முழுமையாகப் புரிந்து கொண்டதற்கான அடையாளமா?

ஞானப் புரிதல் வேண்டும் என்று நாம் கூறுகிறோம்.

ஞானப் புரிதல் என நாம் எதனைக் கூறுகிறோம்?

ஞானப் புரிதலுக்கு உதவியாக நாம் நமது இயக்கங்களை, அகம் மற்றும் புறம் என இரண்டாகப் பிரித்துக் கொண்டுள்ளோம்.

அகத்தில் நமது செயல் என்ன, புறத்தில் நமது செயல் என்ன என்று நாம் பலவாறாகப் பார்த்துள்ளோம்.

அகத்தில் நம்மையறியாமல், தாமாகச் செயல்படும் அம்சங்களும் உள்ளன.

–நாமாகச் செயல்படுத்தும் அம்சங்களும்

உள்ளன.

நம்மையறியாமல் எத்தனையோ உணர்ச்சிகளும், நினைவுகளும் (Thought) ஏற்படுகின்றன. இவை நமது அகத்தில் தாம் ஏற்படுகின்றன.

அவற்றில் குற்றம் கண்டுபிடிக்கவோ, நிர்வாகம் செய்யவோ நாம் முயல்வது சரியல்ல என்பதையும் நாம் பல வகையிலும் பார்த்துள்ளோம்.

புறத்தில் நமது தேவை என்ன, என்பதைப் புரிந்துகொண்டு அதற்கு நமது மன உணர்ச்சிகளையும், நினைவுகளையும்

அந்தப் புறத் தேவைகளுக்கு பயன்படுத்திக் கொள்ளலாம்.

அகத்தில் நமக்குப் பல விதமான உணர்ச்சிகளும், நினைவுகளும் வருவதற்கான காரணம் என்ன?

மகிழ்ச்சியை ஏற்படுத்தும் சூழ்நிலையில் மகிழ்ச்சிகரமான உணர்வுகளும், மகிழ்ச்சியோடு தொடர்புடைய நினைவுகளும் ஏற்படுவதுதான் இயற்கை.

அதுபோல் பிரச்சினையான சூழ்நிலையில் மன வருத்தங்களும், கோபதாபங்களும் அவற்றோடு தொடர்புடைய நினைவுகளும் ஏற்படுவதுதான் இயற்கை.

ஒரு குறிப்பிட்ட சூழ்நிலையில் அனைவருக்கும் ஒரேவிதமான உணர்ச்சிகள்தாம் ஏற்படுமா?

ஒவ்வொருவரும் ஒவ்வொரு விதமான மன இயல்புகளோடு இருக்கிறார்கள். சிலர் எளிதாக உணர்ச்சி வசப்பட்டுவிடுவர்.

சிலர் அப்படி உணர்ச்சி வசப்படுவதில்லை.

நமக்கு ஏற்படும் நல்லவிதமான மற்றும் மோசமான உணர்ச்சிகளுக்குக் காரணம் நமது இயல்பு மற்றும் நாம் எதிர்கொள்ளும் சூழ்நிலைகளே காரணம்.

நமக்கு ஏற்பட்ட ஞானப் புரிதல் காரணமாக நமது சூழ்நிலைகள் எதுவும் மாறப்போவதில்லை.

அவை அவ்வாறே தான் நீடித்துக் கொண்டிருக்கும்.

சரி, இருந்து விட்டுப் போகட்டும்.

நமது ஞானப் புரிதல் காரணமாக நமது இயல்புகள் யாவும் மாறிவிடுமா?

நமது இயல்புகள் காலப் போக்கில் மாறத்தான் செய்யும். ஆனால் உடனடியாக நமது இயல்புகள் எவையும் மாறிவிடாது.

நமது மனோ அனுபவங்களுக்கெல்லாம் காரணம் நாம் எதிர்கொள்ளும் சூழ்நிலையும், நமது மன இயல்புகளும் மட்டுமே ஆகும்.

நமது இயல்புகளும், சூழ்நிலையும் மாறி விடாத பட்சத்தில் நமது மனோ அனுபவங்களிலும் மாற்றம் ஏற்பட்டு விடாது.

பிறகு, ஞானப் புரிதலினால் அப்படி என்ன மாற்றந்தான் ஏற்படும்?

அனைத்தும் அப்படியே நீடிப்பதாயின் ஞானப் புரிதலின் அவசியந்தான் என்ன?

இப்போது –

ஞானப் புரிதல் என்றால் என்ன என்ற கேள்வியை மீண்டும் ஒருமுறை கேட்டுக் கொள்வோம்.

ஞானப் புரிதல் என்று எதனைக் குறிப்பிடுகிறோம்?

அகத்தில் ஏற்படும் எந்த அனுபவங்களையும் நிர்வாகம் செய்து நல்ல உணர்வுகள் எதனையும் நிரந்தரப்படுத்தத் தேவையில்லை.

நமது மன அனுபவங்கள் அனைத்தையும் இயற்கை என எடுத்துக் கொள்கிறோம்.

இதனால் நமது மன அனுபவங்கள் அனைத்தும் கட்டுப்படுத்தப் படாமல் சுதந்திரமடைந்து விடுகின்றன.

சுதந்திரமடைந்த அனுபவங்கள் என்ன ஆகின்றன?

அவை தோன்றியவாறே மறைந்தும் விடுகின்றன.

நமது இயல்புகளும், மீண்டும் மீண்டும் ஒரே விதமான அனுபவத்தை உற்பத்தி செய்யாமல் விடுபட்டு இருந்துவிடுகின்றன.

புறச் சூழ்நிலைகள் யாவும், நமது மன எழுச்சிகளுக்குக் காரணமாக அமைந்திருந்தாலுங் கூட அவை நமது மன எழுச்சிகளை எதிர்பார்க்கவில்லை.

புறச் சூழ்நிலைகள் யாவும் நமது செயல்களைத் தாம் நம்மிடமிருந்து எதிர்பார்க்கின்றன.

புறச் சூழ்நிலைகளை நாம் எவ்வாறு எதிர்கொள்வது என்பது–

நாம் எந்த வகையில் செயல்பட்டு,

செயல்களின் மூலமாக எவ்வாறு எதிர்கொள்வது என்பதே.

புறச் செயல்களை எதிர்கொள்ள, ஞானப் புரிதல் எவ்வாறு உதவி புரிகிறது?

நமக்கு ஞானப் புரிதல் ஏற்பட்டு விட்ட காரணத்தினால் நாம், ஒரு காரையோ, விமானத்தையோ ஓட்டிச் சென்று விட முடியுமா?

புறச் செயல்கள் அனைத்தும், அனுபவம் மற்றும் திறமைகளை அடிப்படையாகக் கொண்டவை ஆகும்.

ஞானப் புரிதலின் உதவியோடு, நமது மன உணர்ச்சிகளின் பாதிப்பு இல்லாமல், நாம் நமது செயல்களை அறிவின் துணை கொண்டு நிறைவேற்ற முடியும்.

ஆனால் மொத்தமாகப் பார்க்கும் போது,

ஞானப் புரிதல் என்பது முழுமையாக அகத்தைச் சார்ந்தது.

இப்போது மீண்டும் அந்த அம்மையாருடைய கேள்விக்கு வருவோம்.

"..... நான் புரிந்து கொண்டது போலவே தெரிகிறது. ஆனாலும் எனது கணவர் மற்றும் மகன் புரிந்து கொண்டது போல் நான் தெளிவாகப் புரிந்து கொள்ளவில்லையோ எனத் தோன்றுகிறது."

– இப்படி அவர் கூறியுள்ளார்.

"நான் புரிந்து கொண்டது போலவே தெரிகிறது" என்று அவரே கூறுகிறார்.

பிறகு அவர் தனது கணவர் மற்றும் மகனுடைய செயல்களோடு ஒப்பிட்டுப் பார்த்து,

தனது புரிதல் முழுமையற்றதாக உள்ளதோ என்ற ஐயமும் அவருக்கு ஏற்பட்டுவிடுகிறது.

இத்தகைய பிரச்சினை– இத்தகைய சந்தேகம் பலருக்கும் இருப்பதற்கு வாய்ப்பு உள்ளது.

மன உணர்ச்சிகளை புறத் தேவைகளுக்கு பயன்படுத்தலாமே யொழிய எந்த உணர்ச்சிகளையும் ஒழுங்கு படுத்தத் தேவையில்லை

–என்ற உண்மையை வெகு சுலபமாகப் பலரும் புரிந்து கொள்கின்றனர்.

அதனால் அவர்களுடைய மனச்சுமைகள் அனைத்தும் இறக்கி வைத்து விட்டது போல் உணர்கிறார்கள்.

அந்த சுமையற்ற தன்மையைக் கூட காலப்போக்கில் இழந்துவிடுகிறார்கள். விளைவாக, "நாம் சரியாகப் புரிந்து கொள்ளவில்லையோ" என்ற சந்தேகத்துக்கும் வந்துவிடுகிறார்கள்.

உண்மையில் அவர்கள் அனைவருமே, எதைப் புரிந்து கொள்ள வேண்டுமோ அதனைப் புரிந்து கொண்டு விட்டார்கள்.

அதனால் தான் அவர்களால் "நான் புரிந்து கொண்டது போலவே தெரிகிறது" என்று கூறமுடிகிறது.

அப்படியானால் என்னதான் பிரச்சனை?

"புரிந்து கொண்டு விட்டோம்" என நிம்மதிப் பெருமூச்சை விட்ட அவர்கள் இப்படி ஒரு சந்தேகத்துக்கு வருவதற்கான காரணம்,

–அவர்கள் தாங்கள் புரிந்து கொண்டதை உறுதிப்படுத்திக் கொள்ளாததுதான்.

நாம் நடத்தும் ஞான முகாம்களில் கடைசி வகுப்பாக "ஞானத்தை உறுதி செய்வது எவ்வாறு" எனும் Confirmation வகுப்பை எடுப்போம்.

நாம் புரிந்து கொண்டதில் பிசிறுகள் எவையேனும் உள்ளனவோ என்று தடுமாற்றம் அடையாமலிருப்பதற்காகத்தான்

"ஞான வாழ்வின் நடைமுறை யதார்த்தங்கள்" எனும் சிறப்பு நூல் ஒன்றையும் வெளியிட்டுள்ளோம்.

நாம் அடைந்தது ஞானந்தான் என்பதை நாம் நமக்குள் உறுதி செய்து கொள்ள வேண்டும்.

இல்லாவிடில் எளிதாகக் கிடைத்த ஞானம்

எளிதாகவே பலனற்றுப் போய்விடும்.

நாம் சரியாகத்தான் புரிந்து கொண்டிருக்கிறோம் என்பதில் நாம் சந்தேகம் அடையத் தேவையில்லை.

புரிதலைப் பொருத்தவரையில் நல்ல புரிதல், சுமாரான புரிதல் என்ற பாகுபாடு எதுவும் கிடையாது.

பிரச்சினைகள் அனைத்தும் புறச் செயல்களோடு தொடர்புடையவையே.

அவற்றை எவ்வாறு எதிர் கொள்வது என்பது புறம் சம்பந்தப்பட்ட பிரச்சினை மட்டுமே.

அது சம்பந்தமாக நமது திறமைகளையும், அணுகுமுறைகளையும் மேம்படுத்திக் கொள்வதில் எந்தத் தவறும் கிடையாது.

ஞானப் புரிதலை மேம்படுத்திக் கொள்வது என்று எதுவும் கிடையாது.

நாம் புரிந்தது சரிதான் என அதற்கு முற்றுப்புள்ளி வைத்திட மட்டும் தெரிந்து கொள்ள வேண்டும்.

★



**K.S. ஜீவமணி**
செல் : 97891 65555

# ஆசிரியர் பகுதி

ஞானியர் அனைவருக்கும் இந்த சக-பயணியின் வணக்கம்.

மனித குலத்தின் மிகப் பெரும் பிரச்சினை மனப் போராட்டம்.

நம்முடைய பரபரப்பான அன்றாட வாழ்வில் குடும்பத்தில், சமுதாயத்தில், தொழிலில் எத்தனையோ பிரச்சினைகளை எதிர்கொள்கிறோம். அது நமக்கு மனப் போராட்டத்தை ஏற்படுத்துகிறது. மனப் போராட்டமே மனநிம்மதியை கெடுத்து விடுகிறது.

மனதில் நிம்மதி இல்லாமல் இருக்கும்போது அது நம் புறச் செயல்களையும் பாதித்து விடுகிறது.

இவை அனைத்திற்கும் ஒட்டுமொத்த தீர்வாக அமைவதுதான் ஸ்ரீபகவத் ஐயா வழங்கும் மனதின் இயக்கத்தை புரிந்துகொள்ளக்கூடிய ஞானப் புரிதல்.

ஆன்மிகத்தில் பல காலமாக பயிற்சியும் முயற்சியும் செய்து கிடைக்காத நிம்மதி இந்தப் புரிதலில் கிடைத்து விடுகிறது. இதை புரிந்து கொண்டதன் விளைவாக நமது ஒட்டுமொத்த அணுகுமுறையுமே சரியான கோணத்தில் மாறிவிடுகிறது.

படிப்பறிவு இல்லாத பாமர மக்கள் கூட இதனை எளிதாக புரிந்து கொள்ளும் வகையில் ஸ்ரீ பகவத் ஐயா அவர்கள் எளிமையாக வழங்கி வருகிறார்கள். இதனால் பயன் அடைந்தவர்கள் ஏராளம்.

கல்லூரி மாணவர்கள், குடும்பப் பெண்கள், உயர் பதவியில் பணி செய்பவர்கள், தொழில் புரிவோர் என எல்லாத் தரப்பினர்களும் இந்த ஞானப் புரிதலை புரிந்து கொண்டு தங்களுடைய டென்ஷன், கவலை, பயம் போன்ற எல்லா வகையான மனப் பிரச்சினைகளில் இருந்து விடுபட்டு நிம்மதியாக வாழ்ந்து வருகிறார்கள். அதுமட்டுமின்றி தற்போது அதிகமாக மன பிரச்சினையை ஏற்படுத்தும் OCD போன்ற மன நோயிலிருந்து முழுவதுமாக குணமடைய இது தீர்வாக இருக்கிறது.

நாம் செய்ய வேண்டியதெல்லாம் இதுதான். மனித குலத்தின் மாபெரும் பிரச்சனைக்கு இப்படி ஒரு தீர்வு மிக எளிமையாக உள்ளது என்பதை தெரியப்படுத்துவது தான். இதைப் பற்றி தெரிந்தவர்கள் ஒரு சதவீதம் என்றால் தெரியாதவர்கள் 99% இருக்கிறார்கள்.

எனவே இதனை அனைவரிடமும் தெரிவித்து அனைவரும் பயனடைய செய்வது புரிந்தவர்களின் கடமையாகக் கொள்ள வேண்டுகிறோம்.

மேலும் வருகின்ற டிசம்பர் மாதம் 24, 25, 26 தேதிகளில் சேலம் ஸ்ரீ பகவத் பவனில், ஸ்ரீபகவத் ஐயா அவர்களின் மூன்று நாள் ஞான முகாம் நடைபெற உள்ளது. இதனைப் பற்றிய விபரம் இம்மாத இதழில் கொடுக்கப்பட்டுள்ளது. இந்த அரிய வாய்ப்பை அனைவரும் பயன்படுத்திக் கொள்ள வேண்டுகிறோம்.

உண்மையை உரைப்போம்!
உலகை உயர்த்துவோம்!!




V.A.P. சரவணன்
செல் : 99942 05880

# கேள்வி பதில்...

## அறிவின் இயலாமையைப் புரிந்து கொள்வதின் மூலம் ஞானம் அடைவது எப்படி?

**கேள்வி :** நான் அறிவின் அடிப்படையில் பல ஆய்வுக் கட்டுரைகள் எழுதி வருகிறேன். எனக்கு மூடநம்பிக்கை எதுவும் கிடையாது. அறிவு சார்ந்து மட்டுமே எதையும் ஏற்றுக் கொள்வேன். இப்பொழுதுதான் கொஞ்ச நாட்களாக ஸ்ரீபகவத் ஐயாவின் உரைகளைக் கேட்டு வருகிறேன். அறிவின் இயலாமையைப் புரிந்து கொள்வதே ஞானம் என்பதை பலவிதமாக கூறுகிறார். அறிவின் இயலாமையை அறிவைக்கொண்டு எப்படி கண்டுபிடித்து புரிந்து கொள்வது? இன்னும் கொஞ்சம் எளிமையாகக் கூற முடியுமா?

**பதில் :** ஞானம் அடைவது எப்படி? அறிவின் இயலாமையைப் புரிந்து கொள்வதே ஞானம்.

மனதின் இயக்கம் எப்படி செயல்படுகிறது என்பதை பற்றி கொஞ்சம் ஆழமாகச் சிந்திப்போம்.

ஞானம் அடைவதற்கு நம்மிடம் இருக்கும் ஒரே ஒரு கருவி நமது அறிவு மட்டும்.

நாம் பிறந்து வளர வளர நமது அறிவும் நம்முடன் சேர்ந்து வளர்ந்து கொண்டே வருகிறது.

ஆரம்பப் பள்ளிப்படிப்பு முதல் உயர்கல்வி வரை அறிவின் மூலமாக கற்று மேலும் அறிவை வளர்த்துக்கொள்கிறோம். அறிவின் உதவியால் மட்டுமே நம்மால் எல்லாச் செயல்களையும் செய்ய முடியும் என்பதை நாம் அனுபவரீதியாக உணருகிறோம். நாம் அன்றாடம் பயன்படுத்தும் சைக்கிள், பைக், கார், செல்போன், கம்ப்யூட்டர், வாட்ஸ்அப் மற்றும் நமது செயல்கள் என அனைத்தையும் நாம் அறிவின் மூலமாக கற்றுக்கொண்டு நடைமுறை வாழ்க்கையில் பயன்படுத்துகிறோம்.

நம் மனம் வெளிப்படுத்தும் எண்ணங்களையும் உணர்வுகளையும் நம் அறிவு எதிர்க்காத வரை நமக்கு எந்த பிரச்சினையும் கிடையாது. பருவ வயதை எட்டிய பிறகு நம் மனது வெளிப்படுத்தும் வேண்டாத எதிர்மறை எண்ணங்கள், வேண்டாத உணர்வுகளான கோபம், பயம், வெறுப்பு, காமம், பொறாமை, போன்றவை யாவும் நம் அறிவுக்கு பிடிப்பதில்லை. மனம் வெளிப்படுத்துகிற இந்த வேண்டாத எண்ண உணர்வுகளை நமது அறிவைக்கொண்டு எப்படி சரிசெய்வது என்று முயற்சி செய்கிறோம். நமது மன இயக்கத்தை நம்முடைய அறிவின் கட்டுப்பாட்டில் கொண்டு வர முயற்சி செய்கிறோம். அறிவு ரீதியான அனைத்து முயற்சிகளும் தோல்வி அடைவதனால் ஆன்மிகத்தின் பக்கம் நாம் எட்டிப் பார்க்கிறோம்.

மனதின் இயக்கத்தை நமது அறிவின் கட்டுக்குள் கொண்டுவர ஆன்மிகத்தில் கூறப்பட்டுள்ள மன ஒருமைப்பாட்டு பயிற்சியான தியானம், தீய எண்ணங்களை மாற்றி அமைத்தல், சுய முன்னேற்றத்துக்கான சங்கற்பம் (Auto suggestion), ஆழ்மனதில் நல்ல விஷயங்களை பதிவு செய்வது என எல்லாவிதமான பயிற்சிகளையும் முயற்சிகளையும் செய்து பார்க்கிறோம். ஓரளவுக்கு வெற்றி கிடைப்பதுபோல் தோன்றினாலும் முடிவில் எல்லாவற்றிலும் தோல்வியே தழுவுகிறது.

நாம் வேறு என்னதான் செய்வது?

அறிவைக் கடந்து நமக்கு சிந்திக்கத் தெரியாது. அதனால் நமக்குத் தெரிந்த அனைத்து முயற்சிகளும் அறிவின் எல்லைக்குள் மட்டுமே இருக்கிறது.

நாம் ஏன் இவ்வாறு செயல்படுகிறோம்? அதற்கு ஏதாவது ஒரு காரணம் இருக்க வேண்டும் அல்லவா?

அது என்ன என்று பார்ப்போம்.

உதாரணமாக, புதியதாக நாம் பைக் (Bike) ஓட்டப் பழகுவதாக வைத்துக்கொள்வோம். அப்படி பழகும்பொழுது ஒரு கையில் கிளட்ச்சும் மற்றொரு கையில் ஆக்சிலேட்டரும், ஒரு காலில் கீரும் (gear) மற்றொரு காலில் பிரேக்கும் என எல்லாவற்றையும் கவனிக்க வேண்டும். இது போகவும் நாம் செல்லும் பாதையையும் கவனிக்க வேண்டும்.

பின்னாடி வருவதை கவனிக்க

கண்ணாடியையும் பார்க்க வேண்டும். இப்படி பல்வேறு வேலைகள் இருக்கும். கற்றுக்கொள்ளும் போது இவற்றையெல்லாம் நினைத்தாலே தலைசுற்றும். இவை அனைத்தையும் நாம் அறிவைக்கொண்டு கற்றுக் கொள்கிறோம். அடுத்தடுத்த கொஞ்ச நாட்களில் பைக் ஓடுவது பழகிய பிறகு ஓட்டுவது தெரியாமல் ஓட்டும் நிலைக்கு மாறிவிடுகிறோம். வண்டியும் நம் உடலின் ஒரு பாகத்தை போல மாறிவிடுகிறது.

அறிவின் முயற்சியில் நாம் கற்ற விஷயம், அறிவின் முயற்சியே இல்லாமல் தாமாக நடப்பதை போல் நடக்கிறது.

இப்படித்தான் நாம் அறிவின் வழியாக கற்றுக்கொள்ளும் அனைத்து விஷயமும் மாற்றம் அடைகிறது.

உணர் நிலையில் conscious mind –ல் நாம் கற்றுப் பழகிய பல விஷயங்கள், கற்றுக்கொண்ட பிறகு உணர்வற்ற நிலையான unconscious mind –ன் இயக்கமாகவே மாறிப் போய் விடுகிறது. இப்படி மாறுவதுதான் சரி என நமது அறிவு புரிந்து கொண்டிருக்கிறது. இதை நாம் அனுபவபூர்வமாகவும் பார்க்கிறோம்.

இதனால்தான் இதே அடிப்படையில் நமது மனதின் இயக்கத்தையும் நமது அறிவின் வழியாக கட்டுப்பாட்டுக்குள் கொண்டு வர முடியும் என்று நினைக்கிறோம்.

நமது அறிவு எப்படி செயல்படுகிறது என்பதை நாம் புரிந்து கொள்ள வேண்டிய முதல் பகுதி.

நமது அறிவு எப்படி செயல்படுகிறது என்பதை இனி பார்ப்போம்.

உண்மை என்னவெனில் முழுமனத்தின் (Total Mind) ஒரு சிறு பகுதியே இந்த conscious mind என்ற அறிவின் பகுதி ஆகும்.

மனதின் இயக்கம் நமது அறிவுக்குக் கட்டுப்பட்டது கிடையாது என்பது நமது அறிவுக்குத் தெரியாது. இதைத்தான் அறிவின் அறியாமை என்று கூறுகிறோம்.

இனி அறிவின் அறியாமையிலிருந்து அறிவு எப்படி விடுபட வேண்டும் என்பதை பார்ப்போம்.

உதரணமாக, நமது உடலின் செயல்பாடு இரு வகையில் செயல்படுகிறது. நமது உடலின் அக உறுப்புகளின் இயக்கம் சுதந்திரமாக தாமாக செயல்படும் இயக்கத்தை சேர்ந்தது (Involuntary action mode). நமது அறிவின் இயக்கத்திற்கு இங்கு எந்த வேலையும் இல்லை.

காலை எழுந்தது முதல் இரவு படுக்கும் வரை நாமாக செய்யும் அனைத்து வேலைகளும் நமது அறிவின் அடிப்படையில் நிகழ்கிறது (Voluntary action mode). இது முழுவதும் அறிவின் இயக்கத்தால் செயல்படும் பகுதியாகும்.

இதைப்போல் மனமும் இரு வகையில் செயல்படுகிறது.

நமக்கு ஏற்படும் எண்ணங்கள், உணர்வுகள் என அனைத்தும் தாமாக ஏற்படுபவை (Involuntary action mode). இங்கு நமது அறிவு பகுதிக்கு எந்த வேலையும் கிடையாது.

நமக்கு என்ன எண்ணம் வந்திருக்கிறது, என்ன உணர்வு வந்திருக்கிறது என்பதை வந்த பிறகுதான் நமது அறிவின் மூலம் நாம் உணர்ந்து கொள்கிறோம்.

என்ன எண்ணம், உணர்வு வந்திருக்கிறது என்பதை அறிவு உணர்ந்து கொண்ட பிறகு அதற்கு புற உலகில் என்ன செய்ய வேண்டும் என்பதைப் பற்றி சிந்திப்பதும் செயல்படுவதும் மட்டும்தான் அறிவின் செயல்பாடு (Voluntary action mode).

மனதின் இயக்கம் நமது அறிவின் கட்டுப்பாட்டில் இல்லை என்பதை நமது அறிவுதான் புரிந்து கொள்ள வேண்டும்.

அறிவு எப்போது, மன இயக்கம் என்பது தாமாக நடைபெறுகிற இயக்கம் (involuntary action - unconscious part) என்பதைப் புரிந்து கொள்கிறதோ, அப்போதுதான் அறிவின் அறியாமை விலகும். இதைத்தான் அறிவின் இயலாமையைப் புரிந்து கொள்வது என்று ஸ்ரீபகவத் ஐயா பல வழிகளில் சொல்லி வருகிறார்.

தாமாக நடைபெறும் மன இயக்கத்தில் தனக்கு எந்த வேலையும் இல்லை என்பதை அறிவு புரிந்து கொள்வது தான் ஞானம்.

இப்படி அறிவு புரிந்து கொள்வதால், இதுவரை, அறிவு தனது கட்டுப்பாட்டில் மனம் இயங்க வேண்டும் என்ற அறியாமையிலிருந்து விடுபட்டு விடுகிறது.

இதனால் மனதின் இயக்கம் சுதந்திரமாக செயல்படுகிறது. மனம் வெளிப்படுத்தும் நேர்மறை, எதிர்மறை எண்ணங்கள், விருப்பமான உணர்வுகள், அருவருக்கத்தக்க உணர்வுகள் என அனைத்தும் தோன்றி மறைந்து கொண்டிருக்கின்றன.

இந்த சுதந்திரமான மன இயக்கத்தை நமது அறிவு இதுவரை புரிந்து கொள்ளாமல் தேவையற்ற குறுக்கீடுகளை செய்துகொண்டு இருந்தது. மன

இயக்கத்தை நிர்வகிக்கும் சக்தியும் தனக்கு கிடையாது என்பதை உணர்ந்து கொள்கிறது. இதனால் அறிவு மன இயக்கத்தை சரி செய்வதிலிருந்து விடுபடுகிறது.

நமது அறிவுப் பகுதிக்கு எங்கு வேலை இருக்கிறது, எங்கு வேலை இல்லை என்பதை நமது அறிவு தெளிவாகப் புரிந்து கொள்கிறது.

நமது அறிவுக்கு மனதின் இயக்கமான அகத்தில் எந்தவிதமான வேலையும் இல்லை. அகத்தில் வெளிப்பட்ட எண்ண உணர்வுகளை அறிவு உணர்ந்துகொண்டு அதற்கு தேவையான புறச் செயலைப் பற்றி சிந்திப்பதும் செயல்படுவதும் அறிவின் வேலை ஆகும்.

அறிவின் வழியாக எல்லாவற்றையும் கற்றுக் கொண்ட அறிவு. மனதின் இயக்கம் தனக்கு கட்டுப்பட்டது கிடையாது என்பதையும் புரிந்து கொள்கிறது.

மன இயக்கத்தில் அறிவு தலையிடாமல் இருப்பது தான் ஞானம். இப்படி மட்டும்தான் அறிவின் இயலாமையை நம்மால் புரிந்து கொள்ள முடியும்.

இப்படி புரிந்துகொண்டு அகத்தளவில் சும்மா இருப்பதுதான் ஞானமாகும்.




# ஜென் கதை

## "எது நிகழ்காலம் ?"

தேடுதல் மிகுந்த ஆன்ம சாதகன் ஒருவன், நிகழ்காலத்தில் வாழ்வதுதான் முழுமையான வாழ்வு என்று நிகழ்காலத்தில் வாழ்வதற்கான அனைத்து முயற்சிகளையும் கடுமையாக மேற்கொண்டான்.

அவனது முயற்சிகள் அனைத்தும் தோல்வியுற்றன. அவனது மனம் ஒருபோதும் நிகழ்காலத்தில் வாழவே இல்லை. கடந்தகால கவலைகளாலும் எதிர்காலம் பற்றிய பயத்தாலும் மிகவும் துன்புற்றான். நிகழ்காலத்தில் வாழ்வது எப்படி என்ற விடை தெரியாமல் ஏங்கி தவித்தான்.

இறுதியாக, எல்லோரும் எளிதில் அணுகும் வண்ணம் உள்ள ஓர் எளிமையாக வாழும் ஞானியைச் சந்தித்து தீர்வு கேட்டான்.

"சுவாமி, மனம் நிகழ்காலத்தில் வாழ்வதுதான் முழுமையான வாழ்வு என்பதை நன்கு புரிந்து கொண்டேன். ஆனால் மனதை நிகழ் காலத்திலேயே வைத்திருப்பது மிகவும் சிரமமாக இருக்கிறது. அதற்கு வழி தெரியாமல் தவிக்கிறேன். நீங்கள் தான் சரியாக வழிகாட்ட வேண்டும்." என்றான்.

ஞானி,"இருப்பது அனைத்தும் நிகழ்காலம் தானப்பா, இறந்த காலமும் எதிர்காலமும் இல்லாதது. இருப்பதை மறுதலிக்காமலிருப்பது தான் நிகழ்காலத்தில் வாழ்வது." என்றார்.

ஆன்ம சாதகன், "சுவாமி, எனக்குப் புரியவில்லை. என் மனம் சதா முடிந்ததைப் பற்றியும் என்ன நடக்குமோ என்ற எதிர்காலத்தைப் பற்றியும் சிந்தித்துக் கொண்டே இருக்கிறது. எப்படி நிகழ்காலத்தில் நிலைப்பது என்று தெரியவில்லை" என்றான்.

ஞானி, "நீ சில நாட்கள் இங்கு தங்கிச் செல். தீர்வு கிடைத்து விடும்" என்றார்.

ஆன்ம சாதகன், ஞானியுடன் சில நாட்கள் தங்கி அவரது அன்றாட நடவடிக்கைகளை கவனித்தான். ஞானி தினமும் காலை, மாலை ஆசிரமத்தை சுற்றி நடைப்பயிற்சி செய்வது வழக்கம். ஆன்ம சாதகனும் ஞானியுடன் சேர்ந்து நடைப்பயிற்சியை மேற்கொண்டான்.

ஒரு மாலை வேளையில் நடைப் பயிற்சியின் போது, கருவேல மரத்தின் முள் ஒன்று ஆன்ம

சாதகனின் காலில் ஆழமாகத் தைத்தது. வலியில் துடித்துப் போனான். வலி அவனுக்கு கடுகடுவென்று இருந்தது. ஓரமாக இருந்த ஒரு பாறையில் அமர்ந்தான். ஞானி அவன் காலில் ஏறிய முள்ளை அகற்றினார். பிறகு வலி குறைந்து சற்று தளர்வாக இருந்தான்.

ஞானி அவனிடம், ”இப்போது நீ ஒரு வலி உணர்வுடன் இருக்கிறாய் அல்லவா, அதை உணர்வதும் கூட நிகழ்காலம்தான். இந்த அனுபவம் நிகழ்ந்து கொண்டிருப்பதை உணர்வதுதான் நிகழ்காலம். இந்த அனுபவத்தில் இருந்து விடுபட வேண்டும் என்றும், இந்த அனுபவத்தை மாற்ற வேண்டும் என்றும் போராடுவதுதான் பிரச்சினை. இந்த அனுபவத்தை மறுதலிக்காமல் ஏற்றுக்கொள்வதுதான் நிகழ்காலத்தில் வாழ்வது.” என்றார்.

ஆன்ம சாதகன், ”புரிகிறது சுவாமி, ஆனால் அதுதான் முடியவில்லை. ஏற்கனவே இப்படி முள் குத்தி ஒரு மாத காலம் அவதிப்பட்டேன். அது பற்றிய எண்ணமும் அதுபோல் இப்போதும் ஆகி விடுமோ என்ற எதிர்காலத்தைப் பற்றியப் பயமும் ஏற்பட்டு கொண்டே இருக்கிறது. இப்படி மனம் நிகழ்காலத்தில் இல்லாமல், இறந்த காலத்திற்கும் எதிர்காலத்திற்கும் அலைபாய்ந்து கொண்டே இருக்கிறது. இதை எவ்வாறு சரி செய்வது?” என்று கேட்டான்.

**ஞானி, ”உன் மனம் இப்படி அலைபாய்ந்து கொண்டிருப்பது தான் நிகழ்கால உண்மை. நிகழ் கால அனுபவம். மனம் அலைபாய்ந்து கொண்டிருப்பதை மறுதலிக்காமல், அதனோடு முரண்படாமல் அதை ஏற்றுக் கொள்வதுதான் நிகழ்காலத்தில் வாழ்வது” என்றார்.**

சாதகன், ”சுவாமி, அப்படி என்றால் மனம் எப்படி இருந்தாலும் அதை அப்படியே ஏற்றுக்கொள் என்கிறீர்களா? அதனை சரி செய்ய வேண்டாமா?” என்று கேட்டான்.

ஞானி, ”மனம் எப்படி இயங்குகிறதோ அதனை ஏற்றுக் கொள்வதுதான் நிகழ்காலத்தில் வாழ்வது. அதனை மாற்றியமைக்கும் எந்த வேலையும் நமக்கு இல்லை. நீ மாற்றியமைக்க முயற்சிக்கும் தோறும், இருப்பதை மறுதலித்து, நிகழ்காலத்தையும் எதிர்காலத்திற்கு கொண்டு சென்று விடுகிறாய்.” என்றார்.

சாதகன் ”அப்படி என்றால் எப்படித்தான் வாழ்வது? மனம் போன போக்கெல்லாம் போக வேண்டுமா? நமது முயற்சிக்கு வேலையே இல்லையா?” என்று கேட்டான்.

”அகத்தளவில் முயற்சிதான் பிரச்சினை. புறத்தில் முயற்சியின்மை தான் பிரச்சினை. நிகழ்க்காலத்தில் வாழ்வது என்பது முயற்சி செய்து அடைவதன்று, இருப்பதை ஏற்றுக்கொள்வது. மன இயக்கத்தோடு முரண்படாமல், மனதில் தோன்றும் சிந்தனைகளில் புறச் செயலுக்கு தேவையானவற்றை எடுத்துக்கொண்டு புறத்தில் திறம்பட செயல் படுவதே நிகழ்காலத்தில் வாழ்வது. இதுவே முழுமையான வாழ்வு.” என்றார் ஞானி.

நன்கு புரிந்து கொண்டான் ஆன்ம சாதகன். அகத்தை ஏற்றுக்கொண்டு புறத்தில் சிறப்பாக செயல்பட்டான்.

# பகவத் பாதை சந்தா விபரம்

நமது பகவத் பாதை மாத இதழானது ஒவ்வொரு மாதமும் 10-ம் தேதிக்குள் தபாலில் அனுப்பி வைக்கப்படுகிறது. இது அதிகபட்சமாக 15 நாட்களுக்குள் அனைவரது இல்லங்களையும் வந்து சேரும் என்று எதிர்பார்க்கிறோம். எனவே ஒவ்வொரு மாதமும் 25ம் தேதிக்குள் "பகவத் பாதை" தங்களுக்கு வராதவர்கள் போனில் தொடர்பு கொண்டோ அல்லது "Pathai Missing" என்று Type செய்து சந்தா எண்ணுடன் தங்களது முழு முகவரியையும் கீழ்க்கண்ட எண்ணுக்கு SMS அனுப்பியோ தகவல் தெரிவிக்குமாறு கேட்டுக்கொள்கிறோம்.

புதிதாக சந்தா செலுத்த விரும்புபவர்கள் இதுவரை சந்தா செலுத்தாதவர்கள், அல்லது புதுப்பிக்காதவர்கள் கீழ்க்கண்ட ஏதேனும் ஒரு வகையில் சந்தா செலுத்துமாறு அன்புடன் கேட்டுக்கொள்கிறோம்.

| | | |
|---|---|---|
| ஓர் ஆண்டு சந்தா | - | ரூ. 100/- |
| ஐந்தாண்டு சந்தா | - | ரூ. 500/- |
| ஆயுள் சந்தா | - | ரூ. 1000/- |

சந்தாத் தொகையை "Sri Bagavath Mission" என்ற பெயரில் M.O. அல்லது சேலத்தில் செல்லத் தக்க D.D. (or) Cheque மூலம் அனுப்பலாம்.

வங்கிக் கணக்கில் நேரடியாக செலுத்துபவர்கள் HDFC Bank - Sri Bagavath Mission A/c. No. 1590762000075, NEFT IFSC : HDFC 0001590 என்ற கணக்கில் செலுத்தலாம். Bank A/c-ல் நேரடியாக செலுத்தியவர்கள் உங்கள் முகவரியை 7904118421 என்ற எண்ணிற்கு SMS மூலம் தகவல் தெரிவிக்க வேண்டுகிறோம்.

# அனைவருக்கும் ஓர் அன்பான
# வேண்டுகோள்



ஸ்ரீபகவத் மிஷன் மீதும் ஸ்ரீ பகவத் ஐயா அவர்கள் மீதும் தனிப்பட்ட ஈடுபாடு கொண்ட நமது குடும்ப உறுப்பினர்கள் அனைவருக்கும் வணக்கம்.

நமது ஸ்ரீபகவத் மிஷனில் வருவாய் ஈட்டும் நோக்கத்தோடு எந்தச் செயலும் செய்வதில்லை.

ஸ்ரீ பகவத் ஐயா அவர்கள் வழங்கும் ஞானத் தெளிவை உலகம் முழுவதும் கொண்டு செல்ல வேண்டும் என்பது மட்டுமே நமது நோக்கம்.

இதன் காரணமாகவே ஐயாவின் அனைத்து நூல்களையும் மாத இதழ்களையும் இலவசமாக Download செய்து கொள்ளும் வசதியையும் குறைந்த விலையில் ஐயாவின் நூல்களையும் வழங்கி வருகிறோம்.

தினந்தோறும் Zoom meeting மூலமாக சத்சங்கங்கள் நடத்தி வருகிறோம்.

இது அனைவருக்கும் பயனுள்ள வகையில் இருக்கிறது.

மேலும் ஐயாவின் ஆலோசனைப்படி சென்னையில் நமது ஸ்ரீபகவத் பவன் அமைப்பதற்கான முயற்சியையும் செய்துவருகிறோம்.

நாம் ஏற்கனவே ஆலோசித்தப்படி, விற்பனைக்கு தயாராக இருந்த இரண்டு பிளாட்களை வாங்குவது என தீர்மானித்த நிலையில் பொருளாதார பற்றாக்குறையால் ஒரு பழைய பிளாட் ஒன்று மட்டும் அனைவரிடமும் உதவி கேட்க அவகாசம் இல்லாததால் நமது மிஷனின் Founderகளாக இருக்கும் உறுப்பினர்கள் சிலரிடம் மட்டும் வட்டியில்லா கடனாக பெற்றும் மேலும் பற்றாக்குறை தொகைக்கு ஐயாவின் குடும்ப நகையை வங்கியில் அடமான கடனாகப் பெற்று அய்யா, தன் மகன் குடும்பத்துடன் தங்கும் வகையில் ஒரு பிளாட் வாங்கிவிட்டோம்.

தற்போது அய்யா எதிர்கொள்ளும் நகை கடன் நிதிப் பிரச்சினைக்கு தேவைப்படும் தொகை ரூபாய் 13 லட்சம். இந்த நகை கடனை திருப்பி செலுத்த வேண்டிய நிர்பந்தத்தில் இருக்கிறோம்.

ஸ்ரீபகவத் மிஷனைப் பொறுத்தவரையில் நாம் இரண்டு வகையான செயல்பாடுகளோடு பயணித்து வருகிறோம்.

1. ஸ்ரீ பகவத் ஐயா வழங்கும் ஞானப் புரிதலை உலகம் முழுவதும் கொண்டு செல்வது.

2. ஸ்ரீ பகவத் மிஷனின் இந்தப் பயணத்தில் ஞானத்தை கொண்டு சேர்ப்பதோடு ஐயாவை பராமரித்து அவரது எளிய தேவைகளையும் அவர் கேட்காமலே பூர்த்தி செய்ய வேண்டும் என்பதே நம் அனைவரின் நோக்கம்.

தற்போது புரவலர்களாக இணைந்து மாதந்தோறும் நிதி வழங்குபவர்களின் உதவியால் இதனை ஓரளவுக்கு எதிர்கொண்டு வருகிறோம்.

ஆனாலும் இது தற்போது போதியதாக இல்லை. மிகவும் பற்றாக்குறையாகவே இருக்கிறது.

தற்போது நகை கடனை அடைக்க வேண்டிய அவசர தேவையில் இருக்கிறோம்.

நன்கொடையாகவோ அல்லது வட்டி இல்லா கடனாகவோ வழங்கி உதவ வாய்ப்புள்ளவர்கள், முன் வருபவர்கள் நம்மோடு தொடர்புகொள்ள வேண்டுகிறோம்.

பயனடைந்தவர்கள் ஒன்றிணைந்து நமது பயணத்தை தொடர்வோம்.

அன்புடன்

**ஸ்ரீ பகவத் மிஷன்.**

**9994205880, 9789165555.**

# நிகழ்ச்சி
# நிழல்கள்

Registration Number of the Registered News Paper TNTAM/2014/57698 |
Postal Registration Number : TN/WR/SL(E)/22/2021-2023
Date of Publication : First Week of Every Month |
Posted at Salem HOP 636001. On 10th of every month.

Published by Shri. V.A.P. Sharavanan on behalf of the Sri Bagavath Mission,
31, Ramalingasamy Street, Ammapet, Salem-636 003. Tamilnadu. India.
Printed by Shri. R. Jayavel at Sree Jayavel Press, 08/11, Gandhi Maidanam, Ammapettai, Salem-636 003.
Editor : Shri. K.S. Jeevamani Cell : 97891 65555











